REGD. No. TN·MS (C) 244 ✻ ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 40 காசு




# அண்ணு

நிறுவனர்: எம்.ஜி.ஆர்




● மலர் 5 சென்னை 13—6—1981 சனி வெளியூர் 14—6—1981 ஞாயிறு இதழ் 234 ●

## "என்னை அழித்துவிட்டால் கழகத்தை அழித்துவிடலாம் என நடக்கும் சதி"

## அண்ணுவின் கொள்கைகளை-லட்சியங்களைக் கட்டிக்காக்க கழகம் என்றென்றும் இருக்கும்

# புரட்சித்தலைவர் சூளுரை

## புரட்சித்தலைவருக்கு வந்த கொலை மிரட்டல் பற்றி திடுக்கிடும் தகவல்

தஞ்சை, ஜூன் 13- "என்னை ஒழித்துக்கட்டிவிட்டால் கழகத்தை அழித்துவிடலாம் என சதி நடக்கிறது. கொலை மிரட்டல் கடிதம் வருகிறது" என முதல்வர் புரட்சித்தலைவர் கூறினர்.

"எம். ஜி. ராமச்சந்திரனை ஒழித்துக்கட்டிவிட்டால் கழகத்தை ஒழித்துவிடலாம்" என சென்னையில் உள்ள ஒருவர் டெல்லியில் உள்ள அவரது உறவினரிடம் பேசியுள்ளார். டெல்லியில் உள்ளவரும் "அதுதான் ஒரேவழி" எனக் கூறியுள்ளார் என்ற திடுக்கிடும் தகவலையும் முதல்வர் கூறினர்.

அப்படி ஏதாவது நடந்தால் தமிழக மக்கள் அவர்களைச் சும்மா விடமாட்டார்கள் என்றும் புரட்சித்தலைவர் கூறினர்.

அண்ணுவின் கொள்கைகளைக்கட்டிக் காக்க லட்சோப லட்சம் கழகத் தொண்டர்கள் உள்ளதாகவும் முதல்வர் மேலும் கூறினர்.

நேற்று நள்ளிரவு வரை ஒரத்தநாட்டில் நடந்த பிரமாண்ட கூட்டத்தில் புரட்சித்தலைவர் பேசினர்.

ஒரத்த நாட்டில் 2.25 லட்சம் ரூபாய் செலவில் கட்டி முடிக்கப்பட்ட குடிநீர் திட்டத்தை முதல்வர் தொடங்கி வைத்தார்.

முன்னதாக நிதியமைச்சர் நாவலர். அமைச்சர்கள் எஸ்.டி.எஸ். திருநாவுக்கரசு சுற்றுலா வாரியத்தலைவர் துரை. கோவிந்தராஜன், வீராசாமி எம். எல். ஏ. ஆகியோர் பேசினர்.

முதல்வர் பேசுகையில் கூறியதாவது:-

கழகம் ஆட்சிப் பொறுப்பேற்ற பிறகு நான் எங்கு சென்றுலும் மக்கள் குடிநீர் வேண்டும் சாலை வேண்டும் பேருந்து வீட்டு மனைப்பட்டா வேண்டும் என்று கேட்கிறுர்கள். மனுக்களையும் தருகிறுர்கள் நாடு விடுதலை பெற்று பல ஆண்டுகள் ஆகியும் இந்த வசதிகளை ஆட்சியாளர்கள் செய்யவில்லை.

இத்தகைய நிலையில் இங்கொன்றும் அங்கொன்றும் அள்ளித் தெளித்தாற்போல் காரியங்களை செய்யாமல் தன் நிறைவு திட்டங்களை செய்து வருகிறோம்.

எனக்கு ஆளத் தெரியவில்லை என்று சிலர் கூறுகிறுர்கள். அவர்கள் பிறக்கும்போதே ஆண்ட பரம்பரையைச் சேர்ந்தவர்கள் போல பேசி வருகிறுர்கள்.

தேர்தலில் அறிவித்தவாக் குறுதிகளை நிறைவேற்

(2.ம் பக்கம் பார்க்க)

## இப்படைதோற்கின்எப்படைவெல்லும்

## என மாற்றரும் மருளும் வகையில்

# சேலத்தை குலுக்கிய

# மாபெரும் பேரணி



## 10லட்சம்பேர்பங்கேற்றமாட்சி:புரட்சித்தலைவர்புகழுக்குபுதுவரலாறு

சேலம், ஜூன் 13- கோஷங்களால் விண்ணதிர. வந்த கூட்டத்தால் மலைகள் கிடுகிடுக்க, சேலம் நகரையே குலுக்கிய எம். ஜி. ஆர். மன்ற மாநாட்டுப் பேரணியில் 10 லட்சத்திற்கும் மேற்பட்ட தொண்டர்கள் பங்கேற்றனர்.

1972 அக்டோபர் உணர்ச்சி தமிழகத்தில் மங்கவில்லை என்று எடுத்துக்காட்டும் வகையில் கழக பொன்னேட்டில் சேலம இன்று புதுவரலாறு படைக்கிறது.

புரட்சித்தலைவர் பட்டாளத்து முதல்வரிசைச் சிப்பாய்பூலாவரிசுகுமாரன் தன்னுயிர் ஈந்து தியாக வரலாறு படைத்த சேலத்தில்இன்று சீரோடும் சிறப்போடும் எம்.ஜி.ஆர். மன்ற மாநாடு தொடங்கியது.

எங்கெங்கு நோக்கினும் மக்கள் கூட்டம்; வீறுகொள் தமிழர் கூட்டம் எனச் சொல்லத்தக்கவகையில் சேலம்நகரே கழகத் தொண்டர்படையின் கூட்டத்தைத்தாங்க முடியாமல் திக்குமுக்காடியது.

அதிகாலை முதலே, அலை அலையாய், அணிஅணியாய் கழக மறவர்கள், பேரணி தொடங்கிய உடையாப்பட்டி அண்ணு சிலை பகுதிக்கு சென்றவண்ணம் இருந்தனர்.

காலை 8 மணிக்குள்ளாகவே தற்குமேல் அப்பகுதிக்கு யாரும் செல்ல முடியவில்லை

லட்சக்கணக்கானகழகத் தொண்டர்கள் கையில் ஏந்திய கொடிகளுடன், கோஷங்களை விண்ணதிர முழக்கிட சிங்கமென ஏறு நடை போட்டு சென்ற காட்சிமாற்றுரையும்மருள வைத்தது.

திராவிட இயக்கத்தில் வரலாற்றில்இப்படியொரு மாநாடு நடைபெற்றதே இல்லை என்ற வண்ணம் நகரையே உலுக்கிய எம்.ஜி.ஆர்மன்றமாநாட்டு ஊர்வலம் இன்று பிற்பகல் துவங்கியது.

சேலம் நகரில் புதிய வரலாறுபடைத்த எம். ஜி. ஆர். மன்ற மாநாட்டு பிரம்மாண்ட ஊர்வலம் இன்று பிற்பகல் உடையப்பட்டி அண்ணு சிலையிலிருந்து புறப்பட்டது 10 லட்சம் பேர் பங்கேற்ற ஊர்வலத்திற்கு மன்றத் தலைவர் முசிறிபுத்தன் எம்.எல்.ஏ. பொதுச்செயலாளர் சௌந்தரராசன் எம். எல்.ஏ பொருளாளர் வரதராசன் ஆகியோர் தலைமை வகித்தனர். முதலில் மன்றத்தலைவர்களும் மற்றும் முக்கிய பிரமுகர்களும் அண்ணுசிலைக்குமாலை அணிவித்தனர். பிறகு ஊர்வலம் புறப்பட்டது.

### கழகக் கொடியேந்தி..

ஊர்வலத்தின் முன் இரண்டு யானைகளில் கழகத் தொண்டர்கள் கழகக் கொடியேந்தி வந்தனர். அதையடுத்து நாட்டிய குதிரைகள் ஊர்வலம் தொடர்ந்து வந்தது. அதற்கு பிறகு சிலம்பாட்டம், மயிலாட்டம், ஒயிலாட்டம் கரகாட்டம் குறவர் குறத்தி நடனம் சுருள்வாள் வீச்சு வீரர்கள் ஆகியோர் ஊர்வலமாக வந்தனர். பாண்டு வாத்தியங்கள்முழங்கஅவர்களைத் தொடர்ந்து மகளிர் அணியினரும் தொண்டர் படையினரும் கழகக் கொடிகளை ஏந்தி வீர முழக்கங்களை எழுப்பி நடந்து வந்தனர்.

அவர்களைத் தொடர்ந்து 200க்கும்மேற்பட்டமோட்டார்சைக்கிள்களில் கழகத் தொண்டர்கள் புரட்சித் தலைவர் படங்களை வைத்து கழகக் கொடிகளுடன் ஊர்வலத்தில் வந்தனர். இதைத் தொடர்ந்து இரண்டாயிரம் கழக செயல் வீரர்கள் சைக்கிள்களில் பெரியார் அண்ணு புரட்சித்தலைவர் ஆகியோர் படங்களை அலங்காரமாக அமைக்கப்பட்ட வண்ணம், வீர முழக்கமிட்டபடி வந்தனர்

### அலங்கார வண்டியில் தலைவர்கள்

அதன் பிறகு அலங்கரிக்

(2.ம் பக்கம் பார்க்க)

## மக்கள் வெள்ளத்தில் திக்குமுக்காடியசேலம்

திராவிட இயக்க வரலாற்றிலேயே இதுவரை கடந்த 15 ஆண்டு காலமாக காணுத வகையில் சேலம் மாநகரில் புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர்.மன்ற அடலேறுகள் குவிந்துள்ளனர்.

தங்க மனம் படைத்த எங்கள் தலைவன்-தமிழகத்தின் பாரி வள்ளல்-தென்னுட்டு காந்தி அண்ணுவின்-அய்யாவின் வாரிசுபொன் மனச் செம்மல் புரட்சித் தலைவரின் திருப்பெயர் தாங்கியுள்ள மன்ற மறவர்கள், கழகத்தின் காளையர்கள் வருகையினல் சேலம் திக்குமுக்காடியது,

'எங்கெங்கு காணும் சக்தியடா' என்ற புலவன் இன்றிருந்தால் 'எங்கெங்கு நோக்கினும் அண்ணுவின் உருவமடா' என்று தான் பாடியிருப்பான்.

பேரறிஞர் பெருந்தகை நம்மை வாழவைத்து-வாழ்த்திக் கொண்டிருக்கும் அமரர் அண்ணுவின் திருஉருவம் பொறித்த இருவண்ணக் கொடிகள் சேலம் போஸ் மைதானத்திற்கு வந்து சேரும் அனைத்து சாலைகளிலும் காற்றில் அசைந்தாடி கழக மன்ற மறவர்களுக்கு கட்டியம் கூறிக் கொண்டிருக்கிறது.

போஸ் மைதானம்

(2.ம் பக்கம் பார்க்க)

தென்திசை தீபமான புரட்சித்தலைவர்

# இந்திய அரசியலுக்கு வழி காட்டும் நாள் வரும்

## வலம்புரிஜான் பேச்சு

சென்னை, ஜூன் 13—தென்திசை தீபமான புரட்சித்தலைவர் இந்திய அரசியலுக்கே வழிகாட்டும் நாள் வரும் என 'தாய்' ஆசிரியர் வலம்புரி ஜான் கூறினர்.

வடசென்னை 47வது வட்டம் கழகப் பொதுக்கூட்டத்தில் 'தாய்' ஆசிரியர் வலம்புரி ஜான் பேசியதாவது:

ஆட்சி கவிழ்க்கப்படப் போகிறது என்கிற அச்சத்தை வெளியிடுகிற வகையில் இங்கே நண்பர்களெல்லாம் பேசியிருக்கிருர்கள்.

பாரதப்பிரதமர் இந்திரா காந்தி பண்பட்ட பழுத்த அகிலம் போற்றும் அரசியல் தலைவர். அவர்களுக்கும் இங்கிருக்கிற இந்திரா காங்கிரஸ்காரர்களுக்கும் சம்பந்தமில்லை. கருணாநிதியின் வாடகை மனிதர்களான சில இந்திரா காங்கிரஸ்காரர்கள் பொறுப்பற்றுப் பேசுவதை வைத்துக்கொண்டு இந்திராகாந்தி மீது கோபப்படுவதில் என்ன நியாயம் இருக்க இயலும்?

இன்றைக்கும் இ. காங்கிரஸ் முதல்வர்களில் சிலர் ஒருவாரம் தவம் கிடந்தும் பிரதமரைப் பார்க்க இயலாமல் திரும்புகிருர்கள். புரட்சித்தலைவரது நிலைமை அதுவல்ல.

ஆட்சி பீடத்திலிருந்து அவர்கள் தூக்கி எறியப்பட்ட நேரத்தில். பதவியிலிருக்கிருர்களா இல்லையா என்று பாராமல் பண்பட்ட அந்தத் தலைவிக்கு பாச வரவேற்புத் தந்தவர் நம் தலைவர்.

ஒடிக் கொண்டிருக்கிற கால வெள்ளத்தில் உருட்ட முடியாத கூழாங்கற்களாக இந்த நினைவுகள் அம்மையாருக்கு இப்போதும் உண்டு: எப்போதும் உண்டு.

### எள்ளளவும் உண்மை இல்லை

கருணாநிதி தனக்கும் இந்திரா அம்மையாருக்கும் ஏதோமிகப்பெரும் நெருக்கம் இருப்பதைப் பதைப்போலப் படம் போட்டுக் காட்டுகிருரே தவிர அதில் எள்ளளவும் உண்மை இல்லை.

கழக ஆட்சிக்கு இன்னமும் சில அமாவாசைகளே பாக்கி இருக்கின்றன என்று பேசுகிருர் நாஞ்சிலார். பௌர்ணமிகளை பாக்கி என்று சொல்லியிருக்கலாம். இருட்டிலே முடிச்சவிழ்க்கிற திருடர்களுக்கு வெண்ணிலாவில் பால்சோறு சாப்பிடுகிற நினைப்பெல்லாம் மறந்து போனது எனக்கொன்றும் வருத்தம் தரவில்லை. நான் குறிக்கிருர்கள் சிலர் கிளி ஜோஸ்யக் காரர்களைப் போல.

மக்கள் மனதாளும், மாணிக்கத் தலைவர்—மனிதப் புனிதர்—புரட்சித் தலைவரது ஆட்சிக்கு முடிவில்லை.

'கட்டடத்திற்கு ஆகாதென்று தள்ளப்பட்ட மூலைக்கல்லே, கட்டடத்திற்கு முதல்கல்லாயிற்று'' என்கிற வேத வசனத்தின்படி புரட்சித் தலைவரே திராவிட மாளிகைக்கு மூலைக் கல்லும். முதற் கல்லுமாவாா.

### கருணாநிதியின் நாடகம்

ஆசைகள் குதிரைகள் ஆனுல் அற்பர்கள் சவாரி செய்வார்கள் என்கிற பழமொழிக்கு அடிக்கடி உதாரணமாகி விடுகிற கருணாநிதியின் நாடகத்திற்கு இதோ ஒரு இடைவேளை வந்திருக்கிறது.

தென்திசை தீபமான புரட்சித்தலைவர் இந்திய அரசியலுக்கே ஒளிசான்று வழி காட்டும் நாளும் வரும்.

இவ்வாறு வலம்புரி ஜான் பேசினர்.

மதுசூதனன் ஜியாவுதீன் மண்ணடி கிருஷ்ணமூர்த்தி கஜேந்திரபாபு ஆகியோர் பேசினர்.

மணியரசன் தலைமை வகித்தார்.

---

சென்னையில்

## தீ விபத்து: ரூ. 10 ஆயிரம் சேதம்

சென்னை, ஜூன் 13. சென்னை கத்திவாக்கம் திருவள்ளுவர் நகரில் உள்ள குடிசைப் பகுதியில் இன்று காலை திடீர் என்று தீ விபத்து ஏற்பட்டது.

இதனுல் இப்பகுதியில் உள்ள 20 குடிசைகள் சேதமடைந்தன. தகவல் அறிந்ததும் தீயணைப்புப்படையினர் அந்த இடத்திற்கு விரைந்து சென்றுமேலும்தீபரவாமல் தடுத்தனர். இந்த விபத்தில் உயிர் சேதம் ஏதும் ஏற்படவில்லை. சுமார் 10 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள பொருள்கள் சேதமடைந்தன என்று தீயணைப்பு படையினர்தெரிவித்தனர்.

## திருமணம்

திருவொற்றியூர்தொகுதி கழக முன்னுள் எம்.எல்.ஏ. பொ. சிகாமணியின் மாமா பார்த்தசாரதியின் மகள் வா. பொற்செல்விக்கும், மாங்காடுசுந்தரமூர்த்தியின் மகன் வெற்றிச் செல்வனுக்கும், நாளை 14-ந் தேதி சென்னை கலைவாணர் அரங்கில் திருமணம் நடைபெறுகிறது.

---

## புரட்சித்தலைவர் சூளுரை...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

றியே தீருவோம்,

பிளுமி நிலப் பிரபுக்கள் ஏழை எளிய மக்களை சுரண்டி சமுதாயத்தைக் குலைத்துக்கொண்டுள்ளார்கள்.

உடனடியாக சிலரை திருப்திப்படுத்த திட்டங்களை நாங்கள் நிறைவேற்றவில்லை.

### வீட்டை தேடிவரும் வேலை

இந்தியாவிலேயே தமிழகத்தில்தான் வறுமைக் கோட்டிற்குக் கீழே உள்ளவர்கள் அதிகம் எனக் கூறப்படுகிறது.

அவர்களை மேம்படுத்த திட்டங்கள் நிறைவேற்றப் படுகிறது.

மீனவர் நல்வாழ்விற்காக தனி வாரியம் அமைக்கவும் முயற்சிகள் மேற்கொண்டுள்ளோம்.

பட்டாளிகள், உழைக்கும் மக்கள் வேலை தேடி அலைகிற நிலைமாறி வேலை வீடுதேடிவரும் காலத்தை உருவாக்க முயலுகிறோம்.

அப்போதுதான் அண்ணாவின் லட்சியத்தை நிறைவேற்றியதாக ஆகும்.

இப்படி நாங்கள் திட்டங்களை நிறைவேற்றிவரும் வேளையில் நான் சென்னையில் இருந்து புறப்படும்போது மொட்டைக் கடிதம் வந்தது.

### கொலை மிரட்டல்

''நீ போனுல் உயிரோடு திரும்பிவர மாட்டாய்'' என கூறப்பட்டிருந்தது அப்படி கடிதம் எழுதியவர்கள்நேரில் வருவார்கள் என எதிர்பார்த்தேன், அப்படியாரும் வரவில்லை.

இன்றைக்கும் சொல்லுகிறேன்.

நேருக்கு நேர் வரட்டும். அவர்களைச் சந்திக்க தயாராகயிருக்கிறேன். அவர்கள் வந்து பார்க்கட்டும். (கைதட்டல்)

### டெலிபோனில் சதி பேச்சு

எம்.ஜி. ராமச்சந்திரனை ஒழித்துவிட்டால் கழகம் இருக்காது என நினைக்கிருர்கள்.

நான் அவர்களுக்குச் சொல்லிக் கொள்வேன். எனக்குப்பிறகும்அண்ணாவின் லட்சியங்களைக் கொண்ட கழகம் தொடர்ந்து இருக்கும். என்னை எப்படியும் ஒழித்துக் கட்டவேண்டும் எனச் சிலர் முயற்சித்துக் கொண்டுள்ளார்கள். சென்னையில் இருந்து ஒருவர் டெல்லியில் உள்ள அவரது உறவினரிடம் போனில் சொல்லியுள்ளார்.

''எம். ஜி. ஆரை ஒழித்து விட்டால், கழகத்தை ஒழித்துவிடலாம்'' எனச் சொல்லியுள்ளார்.

அதற்கு டெல்லியில் உள்ளவரும் ''ஆமாம் அதைத் தவிர வேறு வழியில்லை எனக்கூறியுள்ளார். நான் மீண்டும்கூறுகிறேன். என்னை அழித்தாலும் கழகத்தை அழிக்க முடியாது.

அண்ணாவின் லட்சியங்களைக் காக்க லட்சோபலட்சம் தொண்டர்கள் கழகத்தில் உள்ளார்கள்.

### மீண்டும் தயாராவீர்

அப்படி ஏதாவது நடந்தால் தமிழக மக்கள் அவர்களை சும்மா விடமாட்டார்கள். 1972-ம் ஆண்டைப் போல கழகத்தைக் கட்டிக் காக்க கழகத் தோழர்கள் மீண்டும் தயாராக இருக்க வேண்டும்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினுர்.

முன்னதாக அதிராம்பட்டினத்தில் 18லட்சரூபாய் செலவில் குடிநீர்த் திட்டத்தையும் முத்துப்பேட்டையில் ரூ. 36லட்சம் செலவில் அமைக்கப்பட்ட குடிநீர்த் திட்டத்தையும் முதல்வர் துவக்கி வைத்தார்.

முதல்வர் புரட்சித்தலைவருடன், இந்நிகழ்ச்சிகளில் அமைச்சர்கள், நாவலர், எஸ். டி. எஸ், திருநாவுக்கரசு மற்றும் குடி நீர் வடிகால் வாரியத் தலைவர் துரை கோவிந்தராசன் மற்றும் எம். எல். ஏக்கள் ஆகியோர் பங்கேற்றுள்ளனர்.

---

# மாபெரும் பேரணி

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

கப்பட்ட டிரக் வண்டியில் மன்றத்தலைவர் முசிறிபுத்தன் எம், எல். ஏ. சௌந்திரராசன் எம். எல். ஏ. வரதராசன் ஆகியோர் அமர்ந்து வந்தனர்.

அவர்களைத் தொடர்ந்து லட்சக்கணக்கான தொண்டர்கள் கையில் கழகக் கொடிகளை ஏந்திவாழ்த்து முழக்கமிட்டு வந்தனர். மாநாட்டில் பங்கேற்க வெளி மாவட்டங்களில் இருந்து வந்த கழகத் தோழர்கள் பஸ்கள். வேன்கள், கார்கள் இந்த ஊர் வலத்தை தொடர்ந்து வந்தன. பஸ்கள் வேன்களில் புரட்சித்தலைவர் படங்கள் வைக்கப்பட்டு கழகக் கொடிகள் கட்டப்பட்டு அலங்கரிக்கப்பட்டிருந்தன.

புரட்சித்தலைவரை வாழ்த்தும் வீர முழக்கங்களை அவர்கள் ஒலித்த வண்ணம் ஊர்வலத்தைக் தொடர்ந்து வந்தனர்.

### ஒரு இடத்தை கடக்க $2\frac{1}{2}$ மணி நேரம்

இந்த ஊர்வலம் ஒரு இடத்தை கடக்க இரண்டரை மணி நேரம் ஆனது.

இவர்களை தொடர்ந்து மதுரை மாநகராட்சி மேயர் பாலகிருஷ்ணன் தலைமையில் தொண்டர் படையினர் அணிவகுத்து வந்தனர். சீருடை அணிந்து வந்த தொண்டர்களுடன் மதுரை மாநகர கொறடா இளரசன். பி. கே. காளிமுத்து ஐ. கணேசன் எம். எல். ஏ., ஆகியோர் தலைமையில் சுமார்3000தொண்டர்கள் சீருடை அணிந்து ஊர்வலத்தில் கலந்து கொண்டனர். அவர்களுடன் 300 பெண்கள் சீருடைஅணிந்து வந்தனர்

சேலம் நகரையே உலுக்கிய இந்த ஊர்வலத்தில் புரட்சித்தலைவரின் தொண்டர்கள் 10 லட்சம் பேர் பங்கேற்றனர்.

### அண்ணா ஜோதி

சேலத்தில் நடைபெறும் எம்.ஜி.ஆர். மன்ற மாநாட்டிற்கு தமிழகத்திலிருந்தும் பலமாவட்டங்களிலிருந்தும் 150 கழக தொண்டர்கள் அண்ணா ஜோதியை ஏந்தி வருகின்றனர். இவர்கள் இன்று முதல்வர் புரட்சித் தலைவரிடம் அண்ணா ஜோதியை கொடுப்பர்.

### ஊர்வலம் சென்ற பாதை

அம்மாபேட்டை, அம்மாபேட்டை மெயின் ரோடு, சின்னக்கடைவீதி பஜார், வள்ளுவர்சிலை ராஜாஜிசிலை, அப்சரா தியேட்டர், நியூசினிமா, காந்திசிலை. அண்ணாசிலை வழியாக ஊர்வலம், சென்றது.

ஊர்வலம் சென்ற வழி எங்கும் அலங்கார வரவேற்புவளைவுகள் பதாகைகள், தோரணங்கள் கழகக் கொடிகள் சிறப்பாக கட்டப்பட்டிருந்தன.

வழியில் ஆங்காங்கே நீர் மோர், தண்ணீர் பந்தல் அமைக்கப்பட்டிருந்தன. ஊர்வலத்தில் சென்ற கழக, மன்ற மகளிர் மாணவத் தோழர்களுக்கு கழகத் தோழர்கள் நீர்மோர், தண்ணீர் வழங்கினர்.

### 3 மைல் தொலைவில் நின்ற பஸ்கள் கார்கள்

ஊர்வலம் தொடங்கிய உடையாப்பட்டி அண்ணா சிலையில் இருந்து 3 மைல் தூரத்தில் பஸ்கள் கார்கள் நின்று கொண்டிருந்தன.

மலர்த்தோரணங்களோ என்று வியக்கும் வண்ணம் கழகக்கொடிகள் காட்சியளித்தன.

### விண்ணதிர முழக்கம்

கழகத் தோழர்கள் முழக்கிய முழக்கங்கள் விண்ணை அதிர வைத்தன.

### போர்வீரர்களைப் போல்...

கழகத் தோழர்கள் கட்டுக் கோப்பாக போர் வீரர்களைப் போல் நின்று கொண்டு ஊர்வலத்தை ஒழுங்கு படுத்தினர்.

ஊர்வலத்தில் வந்த அலங்கார வண்டிகள் கவின் கலை நயம் பொருந்தக்கூடிய வகையில் இருந்தது.

---

## பஸ்கள் நுழைய முடியாத சேலம்

சேலம் மாநகர் மக்கள் வெள்ளத்தில் திக்கு முக்காடியுள்ளது. சேலம் நகரை நோக்கி வரும் பஸ்கள் வாகனங்கள் அனைத்திலும் கழகத் தோழர்களும், மகளிர் அணியினரும் வந்த வண்ணம் இருக்கின்றனர். கடல் அலை திரண்டு வந்ததோ என்று பிரமிக்கும் வகையில் மக்கள் திரள் இருந்தது.

நகருக்கு வெளியேயே பஸ்கள் கார்கள் மற்ற வாகனங்கள் நின்றுகொண்டிருக்கின்றன. பஸ்களிலும் கார்களிலும் சென்றவர்கள் அங்கிருந்து நடந்தபடியே செல்கின்றனர்.

சேலம் நகர மக்கள் தங்கள் வீடுகள் முன்பு கழகச் சின்னமான இரட்டை இலை கோலங்கள் போட்டு சிறப்பான அலங்காரங்களை செய்துள்ளனர்.

---

ரெயில் வாகனங்கள் தட்டுப்பாட்டால்

# வெளிமாநிலங்களில் இருந்து அரிசி வருவதில் தாமதம்

## விரைவில் அரிசி கொண்டுவர கழக அரசு தீவிர முயற்சி

சென்னை, ஜூன் 12— ரயில் வாகன்கள் போதிய அளவில் கிடைக்காததால் வெளி மாநிலங்களில் இருந்து தமிழகத்திற்கு அரிசி கொண்டு வருவதில் சங்கடம் ஏற்பட்டுள்ளது.

அரிசி ஏற்றி வர ரயில் வாகன்களைப் பெறுவதற்கு தமிழக அரசு தீவிரமுயற்சியில் ஈடுபட்டுள்ளது.

தமிழகத்தில் ஏற்பட்டுள்ள வறட்சி நிலையை சமாளிக்க மாதம் ஒரு லட்சம் டன் அரிசி வீதம் கொடுத்து உதவ வேண்டும் என்று கழக அரசு கோரிக்கைவிடுத்துள்ளது.

தமிழகம் வந்த மத்திய அமைச்சர் ஆர்.வி. சாமிநாதன்மாதம் 80 ஆயிரம்டன்வீதம் தரப்படும் என்று அறிவித்தார்.

ஆனுல் மத்திய அரசு ஒதுக்கியதோ மாதம் 60 ஆயிரம் டன்தான்.

### வந்தது குறைவு

ஆனுல் தமிழகத்திற்கு40 ஆயிரத்திலிருந்து 45 ஆயிரம் டன் அரிசிதான் வந்தது.

மூன்றுமாத காலத்திற்கு ஒரு லட்சத்து 80 ஆயிரம் டன் அரிசி வந்தது. இதில் ஒரு லட்சத்து 40 ஆயிரம் டன் அரிசி ஆந்திர மாநிலத்தில் இருந்து பெறப்பட்டதாகும்.

மத்திய உணவு கார்ப்பரேஷன் சேமிப்பில்இருந்துஅரிசி கோரப்பட்டது. ஆனுல் கிடைக்கவில்லை.

### கோதுமை ஒதுக்கீடும் குறைந்தது

தமிழகத்திற்கு மாதம் 30 ஆயிரம் டன் கோதுமையை மத்திய அரசு ஒதுக்கி வந்தது இப்போது அந்த அளவும் குறைந்து விட்டது. தமிழகத்திற்கு மாதம் 20 ஆயிரம் டன் கோதுமைதான் தரப்படுகிறது.

ஆந்திரத்தில் அரிசி வியாபாரிகள் விலையை உயர்த்தி விட்டதால் அங்கிருந்தும் அரிசி வாங்க முடியவில்லை.

ஏற்கனவே ஆந்திரத்தில் தமிழகம் வாங்கி இருந்த அரிசியை கொண்டு வர வாகன்களைப் பெற தமிழக அரசு பெரு முயற்சியில் ஈடுபட்டது.

இதற்காக பகிரதப் பிரயத்தனம் செய்தும் வாகன்கள் கிடைக்கவில்லை.

இப்போது மாம்பழ சீசன். மாம்பழம் எடுத்துச் செல்லவாகன்களை அனுப்பி விட்டோம். ஆகவே அரிசியை எடுத்துச் செல்ல வாகன்களை கூடுதலாக அனுப்ப இயலவில்லை என்று ரயில்வே அறிவித்துள்ளது. இதனுல் நுகர் பொருள் வாணிபக்கழகம் ஆந்திரத்தில் வாங்கிய 38 ஆயிரம் டன் அரிசியைத் தமிழகத்திற்கு எடுத்துவர முடியவில்லை.

### லாரிமூலம்

வழக்கமாக ஜூலை, ஆகஸ்ட், செப்டம்பர் மாதங்களில் நியாய விலைக் கடைகளில் அரிசி விற்பனை அதிகமாக இருக்கும்.

மாதம் 15 ஆயிரம் டன் அரிசிதான் சம்ப மாதங்களில் விற்பனை இருந்தது.

இப்போது இந்த அளவு 55 ஆயிரம்டன்னுக உயர்ந்துள்ளது.

வெளியே அரிசி விலை அதிகரித்து இருக்கிறது. ஆகவே குறைந்த விலையில் நியாயவிலைக் கடைகளில் அரிசியை மக்கள் வாங்குகிருர்கள்.

இந்த நிலையில் அரிசி தமிழகத்திற்கு வருவதை விட விற்பனைக்கு அதிகமாக தேவைப்படுகிறது.

ஆகவே வெளி மாநிலங்களில் இருந்து அரிசியையும், கோதுமையையும் கொண்டு வர வாகன்களை நடைபெறும் முயற்சியில் தமிழக அரசு பெரு முயற்சியில் ஈடுபட்டுள்ளது.

அரிசி வருவதில் ஏற்படும் தடங்கலைத் தவிர்க்க வெளி மாநிலத்தில்இருந்து லாரிகள் மூலம் அரிசியைக் கொண்டு வர தமிழக அரசு முயற்சி எடுத்துள்ளது.

தட்டுப்பாடு இல்லாமல் நியாய விலைக்கடைகள் மூலம் மக்களுக்கு அரிசி கிடைக்க தமிழக அரசு எல்லா முயற்சிகளையும் எடுத்து வருகிறது.

---

## மக்கள் வெள்ளத்தில் சேலம்...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

இதுவரை இப்படியொரு பிரம்மாண்டமானபந்தலைப் பார்த்ததே இல்லை.

மாநாட்டுப்பந்தலின்முகப்பில் போருக்கு புறப்படும் வீரர்கள் ஏந்தி நிற்கும் துப்பாக்கி போல வரிசையாக கழகக் கொடிகள் பட்டொளி வீசிப்பறந்து கொண்டிருக்கின்றன,

வெள்ளி மலைகளுக்கிடையே சிவபெருமானின் திருக்கோயில் என்பர் ஆத்திகர்.

ஆமாம்! எங்கள் இதய தெய்வம் ஆற்றும் சொற்பொழிவை கேட்பதற்காக குன்று சூழ் சேலம் மலைகளுக்கிடையேஅனைத்துலக எம். ஜி. ஆர். மன்றத்தினர் மாநாட்டிற்காக ஏற்பாடு செய்திருக்கும் பந்தலும் திருக்கோயில் தான்.

பகைவனுக்கும் அருளும் கொடை வள்ளல்புரட்சித் தலைவரின் அருளுரையை மலைப்பிரசங்கமாககேட்கக் கூடியது லட்சோப லட்சம் தொண்டர் கூட்டம்.

தமிழகமெங்கும், ஏன் பம்பாய், பெங்களூர், பஞ்சாப், டெல்லி இத்தனைக்கும் மேலாக நீலக்கடல் கடந்து சிங்கப்பூர், மலேசியா, இலங்கை நாடுகளிலிருந்தும்வந்திருக்கும்கழக மறவர்களால் சேலம் தன் பெயருக்கு பெருமைசேர்த்துக் கொண்டது.

போஸ் மைதானத்தில் பெண்கள் தங்குவதற்காக உள்ள பெரு கலையரங்கின் மீது இரட்டை இலைக் கோலங்களை வண்ண வண்ண மின் விளக்குகளால் அமைத்திருப்பது தூரத்திலிருந்து பார்ப்பவர்கள் கவனத்தை ஈர்க்கிறது.

---

# சிறுதொழில் வளர்ச்சிக்கு புரட்சிதலைவர் ஆட்சியில் சிறப்புத் திட்டம்

## அமைச்சர் கே. ஏ. கே. சிறப்புப் பேட்டி

சென்னைஜூன் 13— சிறு தொழில் வளர்ச்சியில் புதிய உத்வேகத்தை ஏற்படுத்த புரட்சித்தலைவரின் அரசு விஞ்ஞான ரீதியில் ஒரு சிறப்புத் திட்டத்தைத் தயாரித்து உடனடியாக நிறைவேற்றத்தொடங்கியுள்ளது இத்திட்டங்களின் செயலாக்கம் பற்றி ஊரகத்தொழில் அமைச்சர் கே. ஏ. கே. ஒரு சிறப்புப் பேட்டியில் விளக்கியுள்ளார்.

அமைச்சர் கே. ஏ. கே. அளித்த பேட்டி விவரம் வருமாறு:

தமிழக தொழில்வளர்ச்சியை மேம்படுத்தவும் குறிப்பாக சிறு தொழில் துறையினை உச்சமட்டத்துக்குக் கொண்டு செல்லவும் தமிழக அரசுபுதியஉத்திகளைக் கையாளத் தொடங்கியுள்ளது.

1. பதிவு செய்யப்பட்ட மற்றும் பதிவு செய்யப்படாத சிறு தொழில்கள் பற்றி விஞ்ஞான ரீதியான கணக்கெடுப்பும் ஆய்வும் நடத்தப்படும். சிறு தொழில்களின் பட்டியல் கையேடு தயாரிக்கப்படும். அண்ணா தொழில் நுட்ப பல்கலைக் கழகம், மற்றும் தொழில் நுட்பக்கல்வி நிலையங்களைச் சேர்ந்த 200 மாணவர்கள் விஞ்ஞான ரீதியில் சிறு தொழில்களைப் பற்றி நேரில் சென்று கண்டு ஆய்வு நடத்துவர். இதனுல் சிறுதொழிலை நடத்துவது பற்றி மாணவர்களுக்கு முதல்தரமான நேரடிபரிச்சயம் ஏற்படும். இவ்வகைக்கு ரூ. 50 ஆயிரம் ஒதுக்கப்பட்டுள்ளது. இந்த ஆய்வுப்பணி அடுத்த வாரம் தொடங்கி வைக்கப்படும். இத்தகைய முழு ஆய்வுப்பணி தொடங்குவது இதுவே முதலமுறை.

2. இளம் தொழில் விற்பன்னர்களுக்கு பயன்படும் வகையில் புதிய தொழில் மையங்கள் தொடங்கப்படும். சிறு தொழில் அதிபர்களிடையே தொழில் பேட்டை இடங்களுக்கு பெரும் கிராக்கி இருப்பது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

3. சிறு தொழில்களுக்கு தேவையான மூலப் பொருள்களை சேமித்து வைத்து விநியோகிக்க ஏற்பாடு செய்யப்படும்.

4. சிறு தொழில்களுக்கு தேவையான பொருத்தமான தொழில் நுட்ப ஆலோசனைகளை வழங்க ஒரு தனி நிலையம் உருவாக்கப்படும் இதற்கென ரூ.10 லட்சம் செலவில் திட்டம் தயாராகி வருகிறது. உள்ளூர்சூழ்நிலைக்குஏற்றவாறு நவீன தொழில் உத்திகளை இந்த நிலையம் வழங்கும்.

5. சிறு தொழில்களுக்கு மூலப்பொருள் பெறுவதில் உள்ளசங்கடங்களைத்தீர்க்கவும், தேவைகளை அறியவும் இதுவரை பதிவாகாத சிறு தொழில்களையும்பதிவு செய்ய முயற்சி செய்யப்படும்.

6. சிறு தொழில்களுக்கு தேவைப்படும் உருக்கு நியாய விலையில் கிடைக்க வகை செய்யப்படும்.

7. நலிந்த சிறுதொழில் நிலையங்களில் உற்பத்தியாகும் பொருள்களை விற்பனை செய்வதற்குஅரசு தீவிர முயற்சிகளை மேற்கொள்ளும்.

8 தமிழக தொழில்துறையில் புதிய உற்சாகம் பாய்ந்திடத்தக்க வகையில் அனைத்திந்திய பொருட்காட்சி ஒன்று நடத்தப்படும். இவ்வாண்டு செப்டம்பர்-அக்டோபர் மாதங்களில் நடக்கவிருக்கும் இந்தப் பொருட்காட்சியில் அனைத்திந்திய அளவில் மட்டுமின்றி முக்கியமான பத்து சர்வதேச தொழிற்குழுவினரும் பங்கேற்பர். இந்தபொருட்காட்சியானது சிறு தொழில் உற்பத்தியாளர்களையும், பொருள்களை வாங்குவோரையும் ஒரு அணியில் கொண்டு வரும் பாலமாக விளங்கும்.

இவ்வாறு அமைச்சர் கே. ஏ. கே. கூறினர்.

---

தலைமைக் கழக அறிக்கை எண், 116/81

## மன்னார்குடி கழகத் தோழர்களுக்கு

கழக விதிமுறைகளுக்கு மாறாக நடந்து கழகத்தின் நற்பெயருக்கு களங்கம் விளைவிக்கும் முறையில் பொதுக்கூட்டங்களில் முறைகேடாக பேசியது.

மன்னார்குடி சவுரி (அய்யங்கார்)

கழகத்தின் சாதாரண பொறுப்புகள் உட்பட அனைத்துப் பொறுப்புகளில் இருந்தும் இன்று முதல் நீக்கிவைக்கப்படுகிறார்.

கழக சார்பு மன்றத்தோழர்கள் யாரும் அவருடன் எந்த விதத் தொடர்பும் வைத்துக்கொள்ளவேண்டாம் என்று கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்

மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும் பொதுச் செயலாளர் திருமிகு ப. உ. ச. அவர்களின் அனுமதியுடனும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

எச் வி ஹண்டே
அமைப்புச் சயலாளர்,
அனைத்திந்திய அண்ணா தி.மு.க.

சென்னை-14
13 6 81

---

# வறட்சி நிவாரண நடவடிக்கைகள் தீவிரம்

## தமிழ்நாட்டில்

# சட்டம் ஒழுங்கு திருப்திகரம்

## தமிழக அரசுக்கு கவர்னர் சாதிக்அலி பாராட்டு

கரூர், ஜூன் 13- தமிழ் நாட்டில் சட்டம் ஒழுங்கு நிலவரம் சிறப்பாகவும் திருப்திகரமாகவும் இருந்து வருவதாக தமிழக கவர்னர் சாதிக் அலி கூறினர்.

கரூரில், நிருபர்களுக்கு தமிழக கவர்னர்சாதிக்அலி பேட்டியளித்தார். அப்போது அவர்கூறியதாவது: தமிழ்நாட்டில், சட்டம் ஒழுங்கு நிலைமை திருப்திகரமாக உள்ளது.

மற்ற மாநிலங்களில் உள்ள நிலவரத்தோடு தமிழகத்தை ஒப்பிடுவது என்ற பேச்சுக்கே இடமில்லை.

இது விஷயத்தில் ஒரு மாநிலத்துடன் மற்றொரு மாநிலத்தை ஒப்பிட்டுப் பார்ப்பது என்பதே தவறு ஆகும்.

தமிழகத்தில் நடைபெறும் ஆட்சி கலைக்கப்பட்டு ஜனதிபதி ஆட்சி அமுலாக்கப்படும் சூழ்நிலையை நான் விரும்பவில்லை.

### வறட்சி நிவாரணம்

வறட்சியால் பாதிக்கப்பட்ட பகுதிகளில் தமிழக அரசு தீவிர நடவடிக்கைகளை மேற்கொண்டு வறட்சி நிவாரணப்பணிகளைசெய்து வருகிறது. மக்களின் அடிப்படைத்தேவைகளை பூர்த்தி செய்ய வேண்டியது அவசியமாகும்.

இவ்வாறு கவர்னர் சாதிக்அலி கூறினர்.



### குடிநீர் திட்டம்

கவர்னர் சாதிக்அலி மாயனூர் சென்றுகட்டளை கால்வாய் பகுதியை பார்வையிட்டார்.

இப்பகுதியில் இருந்து தான் சென்னைக்கு குடிநீர் கொண்டு செல்ல திட்டம் ஒன்று வகுக்கப்பட்டுள்ளது தெரிந்ததே.

கவர்னருடன் மாவட்டக் கலெக்டர் எஸ். சீனிவாசன் உடன் சென்ருர்.

கட்டளைக் கால்வாய் பகுதியை தான் வந்து பார்வையிட்டதற்கு விசேஷ காரணங்கள்ஏதும் கிடையாது என்றும்,இத் திட்டம் குறித்து அரசு தான் முடிவுசெய்ய வேண்டும் எனவும் கவர்னர் சாதிக் அலி கூறினர்.

(5-ம் பத்தி தொடர்ச்சி)

கும் பணியில் ஈடுபட்டன.

அந்த தொழிற்சாலை அதிக உயரமாக இருந்ததால் அசோக் நகரில் உள்ள ''ராட்சத ஏணி வண்டி'' (சுனேர்கல்) வரவழைக்கப்பட்டது. தொடர்ந்துபலமணிநேரம் தீயணைப்பு படையினர் தீயை அணைக்க போராடினர். மேலும் அந்த கட்டிடத்தின் அருகில உள்ள மற்ற இடங்களுக்கு தீ பரவாமல் இருக்க தீயணைப்புபடையினர் தக்க பாதுகாப்பு செய்திருந்தனர். இந்தவிபத்தில் 10 லட்சம் ரூபாய் மதிப்புள்ள பொருள்கள் சேதமடைந்ததாகப் போலீசார் தெரிவித்தனர்.



## சென்னையில் பயங்கர தீ விபத்து : ரூ. 10 லட்சம் சேதம்

சென்னை, ஜூன் 13— சென்னை பிராட்வே லோன்ஸ்குயர்என்ற இடத்தில்பிளாஸ்டிக்பை,பெட்டி மற்றும் சாமான்கள் தயாரிக்கும் தொழிற்சாலையில் நேற்று திடீரென்று தீவிபத்து ஏற்பட்டது. இதனல் 10 லட்சம் ரூபாய் மதிப்புள்ள பொருட்கள் தீயில் கருகி நாசமாயின. இச்சம்பவம் நேற்று காலை நடந்தது. தகவல்கிடைத்தவுடன் சென்னை தீயணைப்பு படையைச் சேர்ந்த 18 வண்டிகள் இடத்திற்கு விரைந்து சென்று தீயணைக்

(1-ம் பத்திப் பார்க்க)

### சென்னை நகரில்

# பயங்கர தீ விபத்து: 150 குடிசைகள் நாசம் கபாலி ஆறுதல்

சென்னை, ஜூன், 13-சென்னை நகரில் நேற்று பிற்பகல் ஏற்பட்ட பயங்கர தீ விபத்தில் 150 குடிசைகள் எரிந்து சாம்பலாயின

பாதிக்கப்பட்ட மக்களுக்கு உடனடி நிவாரண உதவிகள் அளிக்கப்பட்டன.

சென்னை ராயபுரம்சூரிய நாராயணசெட்டி ரோடில் உள்ள குடிசைப் பகுதியில் நேற்று பிற்பகல் தீப்பிடித்தது.

தகவல் கிடைத்ததும் தீயணைக்கும் படையினர் 7 தீயணைப்பு வண்டிகளில் சென்று 3 மணி நேரம் போராடி தீயை அணைத்தனர்.

### 250 குடும்பம் வீடு இழந்தது

இந்த தீ விபத்தில் 150 குடிசைகள் எரிந்து சாம்பலாயின. இதில் குடியிருந்த 250 குடும்பங்கள் வீடு இழந்தன.

இந்த தீ விபத்தில் ரூ.58 ஆயிரத்து 650 மதிப்புள்ள சொத்துக்கள் சேதம் அடைந்தன.

தீ விபத்தில் பாதிக்கப்பட்ட 250 குடும்பத்தினருக்கும் மாநகராட்சி சார்பில் ஆயிரம் உணவுப் பொட்டலங்கள் வழங்கப்பட்டன.

குடிசை மாற்று வாரியத் தலைவர் கபாலி விபத்து நடந்த இடத்திற்கு விரைந்தார். வீடு இழந்தவர்களுக்கு ஆறுதல் தெரிவித்தார். நிவாரண வேலைகளைக் கவனிக்க ஏற்பாடு செய்தார்.

மாநகராட்சி தனி அதிகாரி முருகராஜ், அவரது உதவியாளர் ரமணன் மற்றும் அதிகாரிகளும் தீப்பிடித்த பகுதியை பார்வையிட்டனர்.

நகர செரீப்பும் நேரில் சென்று பாதிக்கப்பட்டவர்களுக்கு ஆறுதல் கூறினர்.

### பொய்ச் செய்தி: மதுரையில் ஆர்ப்பாட்டம்

மதுரை. ஜூன் 13— அருப்புக் கோட்டை அருகே பாளையம்பட்டியில் நடந்த நிகழ்ச்சி ஒன்றில் முதல்வர் புரட்சித் தலைவர் கலந்து கொண்டு ஆற்றிய உரையை மதுரையில் இருந்து வெளி வரும் மாலை முரசு தவருக, வெளியிட்டதாக, கூறி அப்பத்திரிகை அலுவலகம் முன்பு ஆர்பபாட்டம் நடந்தது.

இதில் மதுரை மாநகர் மாவட்ட கழக செயலாளர் மதுரை எஸ். பாண்டியன் மதுரை புறநகர் மாவட்ட கழக செயலாளர் சேடப்பட்டி முத்தையா. மேயர், துணைமேயர், மற்றும் ராசன் செல்லப்பா, முன்னள் துணை மேயர் சந்தானம் ஆகியோரும் மற்றும் ஏராளமானகழகத்தொண்டர்களும், எம். ஜி. ஆர். மன்றத்தினரும் கலந்து கொண்டனர்.

தவருன செய்தி வெளியிட்டமைக்காக வருத்தம் தெரிவித்து திருத்தம் வெளியிடுவதாக பத்திரிகை நிர்வாகத்தினர் ஒப்புக் கொண்டதை அடுத்து ஆர்ப்பாட்டம் முடிவுற்றது.

### கலைக்குழு முகவரி

தஞ்சை தென்னவன்லதா
நெடார்
மாணுங்கோரை P. O
தஞ்சாவூர்



## மதுரையில் 4கொலைகள்

மதுரை ஜூன் 13— மதுரை நகரில் ஒரே நாளில் 3 பயங்கர படுகொலைகள் நடந்துள்ளன மதுரைமுந்திரிதோப்பைச் சேர்ந்த 24 வயதான ஒருவரை சிலர் முன் விரோதம் காரணமாக அடித்துக்கொலை செய்துள்ளனர். அதுபோல் பிரபாகரன் என்ற மாணவனுக்கும், முடிவெட்டும் தொழிலாளி மனோகரனுக்கும் ஏற்பட்டவாய்த் தகராறில் மனோகரன் கத்தியால் குத்திக்கொலை செய்யப்பட்டுள்ளார்.

வெம்பக் கோட்டை போலீஸ்சரகத்தில் கொலை வழக்கில் சம்பந்தப் பட்டிருந்துதற்போது ஜாமீனில் வெளிவந்துள்ள சிங்கராஜ் துரைசாமி ஆகியோரை சிலர் அரிவாளால் வெட்டிக் கொலை செய்ததாகப் போலீஸ் தரப்பில் தெரிவிக்கப்பட்டுள்ளது. இந்த மூன்று கொலைகள் சம்பந்தமாக போலீசார் வழக்கு ஒன்று பதிவுசெய்து 4 கொலைகளில் சம்பந்தப்பட்டவர்களையும்தேடிவருகின்றனர்



## தமிழ் நாடு அரசு பரிசுச் சீட்டுதிட்டம்

### 47வது குலுக்கல் முடிவுகள்

நாள் : 10.6.81
இடம் : இராசாசி மண்டபம்,சென்னை-600 002.

| தரம் மற்றும் பரிசுத் தொகை | GO வரிசை | | GP வரிசை | | GQ வரிசை | |
|---|---|---|---|---|---|---|
| முதல் பரிசு ஒன்று ரூ. 1,00,000 | 506219 பெரியார் | | 553723 கர்நாடகா | | 582246 மதுரை | |
| இரண்டு ஆறுதல் பரிசுகள் தலா ரூ. 1,000 | 506218 | 506220 | 553722 | 553724 | 582245 | 582247 |
| மூன்று இரண்டாவது பரிசுகள் தலா ரூ. 10,000 | 538198—தஞ்சை | | 456742 பாண்டிச்சேரி | | 448091 திருச்சி | |
| | 650029—திருச்சி | | 621527-தென் ஆற்காடு | | 674690 மதுரை | |
| | 985598—சென்னை | | 813336—தஞ்சை | | 887343ராம்நாட் | |
| ஆறு ஆறுதல் பரிசுகள் தலா ரூ. 500 | 538197 | 650030 | 456741 | 621528 | 448090 | 674691 |
| | 538199 | 985597 | 456743 | 813335 | 448092 | 887342 |
| | 650028 | 985599 | 621526 | 813337 | 674689 | 887344 |
| ஐந்து மூன்றாவது பரிசுகள் தலா ரூ. 5,000 | 080722 | 611234 | 145606 | 802708 | 241138 | 928382 |
| | 226039 | 962341 | 444038 | 642999 | 247829 | 987189 |
| | 319996 | | 599925 | | 689778 | |
| பத்து ஆறுதல் பரிசுகள் தலா ரூ. 300 | 080721 | 319997 | 145605 | 599926 | 241137 | 689779 |
| | 080723 | 611233 | 145607 | 802707 | 241139 | 928381 |
| | 226038 | 611235 | 444037 | 802709 | 247828 | 928383 |
| | 226040 | 962340 | 444039 | 642998 | 247830 | 987188 |
| | 319995 | 962342 | 599924 | 643000 | 689777 | 987190 |
| இருபத்தி ஐந்து நான்காவது பரிசுகள் தலா ரூ. 1,000 | 048132 | 649859 | 024518 | 648142 | 012192 | 509922 |
| | 059325 | 698972 | 062024 | 699791 | 109882 | 510384 |
| | 088427 | 710624 | 133424 | 729808 | 124429 | 569378 |
| | 117215 | 786340 | 171302 | 760097 | 179440 | 589815 |
| | 178717 | 829429 | 179856 | 760469 | 186581 | 673627 |
| | 221540 | 875710 | 228720 | 764828 | 196129 | 687912 |
| | 338810 | 878284 | 298803 | 793971 | 222112 | 776939 |
| | 347177 | 887090 | 303091 | 838066 | 266029 | 809885 |
| | 420624 | 930264 | 374167 | 854730 | 343887 | 815738 |
| | 435702 | 933631 | 444130 | 870617 | 367678 | 866812 |
| | 473210 | 947986 | 477353 | 988799 | 372118 | 969576 |
| | 542557 | 986089 | 602565 | 996558 | 446582 | 985232 |
| | 570258 | | 608192 | | 494296 | |
| நூறு ஐந்தாவது பரிசுகள் தலா ரூ.500 (கீழ்க்கண்ட ஐந்துஇலக்கங்களில் முடியும் எல்லா எண்களுும) | 10343 | 45051 | 04341 | 64924 | 17709 | 58490 |
| | 17206 | 57993 | 41524 | 76981 | 18297 | 63721 |
| | 35343 | 63597 | 50001 | 78418 | 38930 | 80343 |
| | 40304 | 72330 | 57572 | 87483 | 48228 | 88822 |
| | 43903 | 74977 | 60557 | 96499 | 49555 | 88433 |
| ஐநூறு ஆறாவது பரிசுகள் தலா ரூ 100 கீழ்க்கண்டநான்குஇலக்கங்களில் முடியும் எலலாஎண்களும) | 2914 | 8307 | 0628 | 7609 | 4633 | 8411 |
| | 4941 | 9398 | 2359 | 7786 | 5243 | 9578 |
| | 4945 | | 6474 | | 6908 | |
| இரண்டாயிரம் ஏழாவது பரிசுகள் தலா ரூ. 50 கீழ்க்கண்டமூன்று எண்களிலமுடியும நம்பர்கள) | 117 | 571 | 185 | 326 | 485 | 713 |

பரிசுத் தொகை வழங்கும் இடங்கள் குறித்து பரிசுச் சீட்டின் பின்புறம் பார்க்கவும்.

குறிப்பு: செய்தித் தாள்களில் வெளியிடப்பட்டுள்ள குலுக்கல் முடிவுகளில் ஏற்படும் அச்சுப் பிழைகளுக்கு இவ்வலுவலகம் பொறுப்பல்ல. பரிசு பெற்றவர்கள் தமிழக அரசின் அதிகாரபூர்வமான அரசிதழில் பரிசு பெற்ற எண்களை சரிபார்த்துக் கொள்ளலாம். அரசிதழ் பெற்றுக் கொள்ள விரும்புவோர் விற்பனை அதிகாரி, அரசாங்க வெளியீட்டு அலுவலகம், சென்னை 6001 002 என்ற முகவரிக்கு தொடர்பு கொண்டு பெற்றுக் கொள்ளலாம்.

பரிசுத் தொகை பெறவிண்ணப்பிக்க வேண்டிய கடைசி நாள்: 7 9-1981

## சென்னையில் பஸ் கட்டண சீரமைப்பு

சென்னை, ஜூன் 13— தமிழகத்தில் மாற்றியமைக்கப்பட்ட பஸ் கட்டணங்கள் நேற்று 12ந் தேதி முதல் அமுலுக்கு வருகின்றன. என்று பல்லவன் போக்குவரத்துக் கழக மக்கள் தொடர்பு துறை அறிவித்துள்ளது.

தமிழகத்தில் பல்லவன் போக்குவரத்தில் மாற்றியமைக்கப்பட்ட பஸ் கட்டண உயர்வு கடந்த 10ந் தேதி முதல் அமுலுக்கு வருவதாகஇருந்தது. பிறகு அது இரண்டு நாட்கள் தள்ளிப் போடப்பட்டு நேற்று முதல் அமுலுக்கு வருகிறது.

சீரமைக்கப்பட்ட பஸ் கட்டண விகிதப்படி சென்னையில் குறைந்த பட்ச கட்டணம் 30 காசாகவும், அதிக பட்சக் கட்டணம் ஒரு ரூபாய் 55 காசாகவும் இருக்கும். முன்பு குறைந்த பட்ச கட்டணம் 25காசாகவும்; அதிக பட்ச கட்டணம் ஒரு ரூபாய் 40 காசாகவும் இருந்தது.

தற்போது சீரமைக்கப்பட்ட பஸ் கட்டண உயர்வுபடி 30, 40, 50, 60, 70, 75, 80, 85 காசுகள் என்ற விகிதத்தில் இருக்கும்.

தமிழகத்திலுள்ளஎல்லா பஸ் போக்குவரத்துக் கழகங்களும் இந்த புதிய பஸ் கட்டண சீரமைப்பை 12ந் தேதி (வெள்ளி) முதல் அமுல் படுத்தும் என்று பல்லவன் உயர் அதிகாரி ஒருவர் தெரிவித்தார்.

அஞ்சாநெஞ்சன் பட்டுக்கோட்டை

## அழகிரி பெயரில் புதிய பேருந்து போக்குவரத்துக் கழகம்

**சென்னை, ஜூன். 13-திராவிடர் இயக்கத் தூண்களில் ஒருவராக இருந்த அஞ்சா நெஞ்சன் பட்டுக்கோட்டை அழகிரி பெயரில் பஸ் போக்குவரத்துக் கழகம் ஒன்றை கழக அரசு அமைத்துள்ளது.**

தந்தை பெரியார்போக்குவரத்துக்கழகமும், பல்லவன் போக்குவரத்துக்கழகமும் சீர்திருத்தி அமைக்கப் படுகின்றன.

அதன்படி தந்தை பெரியார் போக்குவரத்து கழகம் ஒன்றும் பட்டுக்கோட்டை அழகிரி போக்குவரத்துக் கழகம் ஒன்றும் உருவாக்கப்படுகிறது.

தந்தை பெரியார் போக்குவரத்துக் கழகத்தில் தென்ஆற்காடுமாவட்டம் முழுவதும், மற்றும் செங்கல்பட்டுமாவட்டத்தின் தெற்குப் பகுதி அடங்கும். இதன் தலைநகரம் விழுப்புரம்.

### தலைநகர் வேலூர்

பட்டுக்கோட்டை அழகிரி போக்குவரத்து கழகத்தில் வட ஆற்காடு பகுதி முழுவதும், மற்றும் செங்கற்பட்டு மாவட்டத்தின் வடக்குப் பகுதியும் அடங்கும். இதன் தலைநகரம் வேலூர்.

பல்லவன் போக்குவரத்து கழக பெருநகர் (மெட்ரோ) போக்குவரத்து தொடர்ந்து நீடிக்கும்.

தந்தை பெரியார், பட்டுக் கோட்டை அழகிரி போக்குவரத்துக் கழக ஊழியர்கள் மாறுதல் விரும்பினல் முடிந்தஅளவு அனுமதிக்கப்படும் என்று அரசு அறிவிப்பில் கூறப்பட்டுள்ளது.

### திருமணம்

திருமழிசை பொன்னுவேல் கிராமணியின் மகன் சிட்டிபாபுவிற்கும், கொப்பூர் சம்பந்த கிராமணியின் மகள் செல்விக்கும் இம் மாதம் 14ந்தேதி திருமழிசை வி. பி. கோவில் தெருவில் உள்ளமணமகன் இல்லத்தில் திருமணம் நடைபெறுகிறது.

புதுவையில்

## கழகத் தோழர்கள் மீது தாக்குதல்

புதுவை, ஜூன் 13— புதுவை காரைக்கால் பகுதியை சேர்ந்த கழகத் தோழர்கள் பட்டினம், குமார் ஆகியோரைகடந்த 6 ந் தேதி அன்று தி.மு.க. காலிகள் சிலர் திடீர் என்று கட்டைகம்புகளால் தாக்கி விட்டு தலைமறைவாகி விட்டனர். உயிருக்கு ஆபத்தான நிலையில் இருவரும் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டு சிகிச்சை பெற்று வருகின்றனர். இது சம்பந்தமாக போலீசார்வழக்கு ஒன்று பதிவு செய்து தற்போது தி. மு. க. காலிகள் சிலரை கைது செய்து விசாரணை நடத்திவருகின்றனர். ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வரும் கழகத் தோழர்கள் இருவரையும் மாநில துணைச்செயலாளர் அமீதுசுல்தான், பொதுக் குழு உறுப்பினர்கள் ராமசாமி, சேஷன், ராமானுஜம், ஜேம்ஸ், கலைமாறன. மற்றும் கழகப் பிரமுகர்கள் நேரில்சென்றுபார்த்து உடல்நலம் விசாரித்தனர்.

இந்தியாவின் முன்னாள் தலைமை நீதிபதி

## கஜேந்திர கட்கர் மறைவு

பம்பாய், ஜூன் 13— இந்தியாவின் முன்னாள் தலைமை நீதிபதி பி. பி. கஜேந்திரகட்கர்(வயது81) நேற்று மறைவு எய்தினர். ஒரு மாதத்திற்கு மேலாக நோயுற்றிருந்த அவர், கடந்த வாரம் பிரீச் காண்டி மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டிருந்தார். அங்கு அவர் மரணம் அடைந்தார்.

தெற்கு பம்பாய் சந்தன் வாடி மின்சார மயானத்தில் தகனம் நடந்தது. அங்கு நடந்த அனுதாபக் கூட்டத்தில் சுப்ரீம் கோர்ட் தலைமை நீதிபதி சந்திரசூட், பம்பாய் உயர் நீதி மன்ற தலைமை நீதிபதி தேஷ்பாண்டே, ராம்ஜோஷி, மற்றும் பலர் பேசினர்.

மத்திய அமைச்சர்கள் சிவசங்கர், ஜெயில்சிங் அகியோர் அனுதாபச்செய்திகளை அனுப்பியுள்ளனர்.



பட்ஜெட்டில் அறிவித்தபடி

## வர்த்தகர் நல உரிமை ஆலோசனை குழு

### கழக அரசு அமைத்தது

**சென்னை, ஜூன் 13-பட்ஜெட்டில் அறிவித்தபடி வர்த்தகர் நல உரிமை ஆலோசனைக் குழுவை கழக அரசு அமைத்தது.**

வர்த்தகர் நல உரிமை ஆலோசனைக் குழுவின் தொடக்க கூட்டம், கோட்டையில் அமைச்சர் எஸ். டி. எஸ். தலைமையில் நடந்தது.

நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூட்டத்தில் கலந்து கொண்டார்.

விற்பனை வரி, உணவு கலப்படம், அத்தியாவசிய பண்டங்கள் சட்டம் கடைகள் மற்றும் நிறுவனங்கள் சங்கம், வர்த்தகர்கள் சம்பந்தப்பட்ட பிரச்சினைகள் பற்றி கூட்டத்தில் விவாதிக்கப்பட்டது.

இந்த குழுவினை அமைப்பதற்கு அரசு எடுதத முடிவை, வர்த்தகப்பிரதிநிதிகள் பாராட்டினர்.

இந்தியாவிலேயே இது போன்ற அமைப்பு இது ஒன்றுதான் என்றும் குறிப்பிட்டனர்.

இந்தக்குழுவில் வர்த்தகர் பிரதிநிதிகளும் எம்.எம்.ஏ.க்களும் அரசு உயர் அதிகாரிகளும்இடம் பெற்றுள்ளனர்.

## கைவினை ஆசிரியர்களுக்கு பதவி உயர்வு

சென்னை, ஜூன் 13— தனியார் மற்றும் அரசு நடுநிலைப் பள்ளிகளில் பகுதி நேர ஆசிரியர்களாகப் பணிபுரியும் 250 ஆசிரியர்களின் பதவிகளை முழுநேர பதவிகளாக்க தமிழக அரசு அனுமதி வழங்கியிருக்கிறது இந்த உத்தரவு இந்த மாதம் முதல் தேதியிலிருந்து அல்லது பள்ளிகள் திறக்கப்படும் நாளிலிருந்து நடைமுறைக்கு வரும். இதனால் 250 ஆசிரியர்கள் அதிக பயன் பெறுவர்.

## சேலத்தில் பாரிஸ் கோபுரம்

சேலம், ஜூன் 13. தென்னாற்காடு மாவட்டத்தின் சார்பில் மின் விளக்குகளால் அலங்கரிக்கப்பட்ட "பாரிஸ் கோபுரம்" ஒன்று, சேலம் மாநகர வாயில் அழகுற, மாவட்ட எம். ஜி. ஆர். மன்ற செயலாளர் தே. ஜனார்த்தனன் முன்னிலையில் ரூ. 5 ஆயிரம் செலவில் அமைக்கப்பட்டது.

தெ. ஆ. மாவட்டத்திலிருந்து 500 பஸ்களும், 101 அண்ணா ஜோதியும் சேலத்திற்கு வந்துள்ளது.

## உதயகுமார் திருமணம்

திருத் துறைப்பூண்டி, ஜூன் 13-வருகிற 21 ஆம் தேதி ஞாயிறன்று காலை 8 மணி அளவில திருத்துறைப்பூண்டி, விட்டுக்கட்டி வள்ளுவர் உதவி துவக்கப்பள்ளியில் கழகப் பேச்சாளர் கவிஞர் உதயகுமாருக்கும், கோட்டகம் சுப்பையன் மகள் கோகிலாம்பாளுக்கும் அமைச்சர் கோமதிசீனிவாசன் தலைமையில் அமைச்சர் எஸ். திருநாவுக்கரசு சட்டமன்ற உறுப்பினர் எம். எஸ். மாணிக்கம் சு. மதன் கோவன், அழகு. திருநாவுக்கரசு, நாகை மகாலிங்கம் ஆகியோர் வாழ்த்துரை வழங்க திருமணம் நடைபெற உள்ளது.

தொடக்கப்பள்ளி ஆசிரியர் இணைப்பு

## மாநில செயற்குழு கூட்டம்

புதுக்கோட்டை, ஜூன் 13 தமிழ்நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர் இணைப்பு இயக்க மாநில செயற்குழு கூட்டம் இம்மாதம் 14ந் தேதி காலை 10 மணிக்கு சேலம் குமாரசாமி பட்டி சாலையிலுள்ள 149 எண் கட்டிடத்தில் மாநிலத்தலைவர் வி. கனகராசு, மாநிலப் பொருளாளர் க.ராசையா ஆகியோர் முன்னிலையில் நடை பெறுகிறது என்று அதன்பொதுச்செயலாளர் குகானந்தம் தெரிவித்துள்ளார்.


Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029.
Editor:
K. PARASURAMAN